# 4. களவழி நாற்பது

## நூல் வரலாறு.

ஆசிரியர் : **பொய்கையார்**

நாடு : **பாண்டி நாடு**

காலம் : **கி. பி. 775 - 800.**

இந்நூல் நானூற்பதில் இறுதியிலுடையதாகும். இது 42 செய்யுட்களையுடையது. பழைய நூல்களில் 41-ம், புறத்திரட்டில் 1-ம் ஆக 42 கிடைக்கப் பெற்றுள்ளன. இது கடவுள் வாழ்த்துப் பெறுத பதினெண் கிழ்க்கணக்கு நூல்களில் ஒன்று. இன்னிசை, நேரிசை, பஃறொடை வெண்பாக்களைக் கொண்டது. இதில் இருபாடல்கள் இடைச் செருகலாக அமைந்துள்ளன போல் காணப்படுகின்றன. அவை 9, 32 இலக்கமுள்ளனவாக இருக்கலாம் எனத் தோன்றுகிறது. அறிஞர்கள் ஆய்ந்து கூறின் நன்மை பயக்கும். இந்நூலின் பெருமையை அறிந்த இளம் பூரணர் முதல் ஏனைய உரையாசிரியர்களும், வீரசோழிய உரையாசிரியர், நன்னூல் மயிலை நாதர் முதலியோரும் எடுத்தாண்டுள்ளனர்.

களவழி இருவகைத்து. ஒன்று உழவரின் ஏர்க்களத்தின் சிறப்பினைப் பாடுதல். மற்றொன்று புலவரால் போர்க்களத்தைப் பாடுதல். இந்நூல் போர்க்களத்தின் சிறப்பினைப் பாடுவதாகும்.

இந்நூலாசிரியர் பொய்கையார் என்பர். இப் பெயரினர் பலர் காணப்படுகின்றனர். சங்க இலக்கியங்களில் காணப் பெறும் பொய்கையார் ஒருவர் ஆவர். அவர் சேரமான் கோக்கோதை மார்பனைப் பாடுவதால் இந்நூலாசிரியர் ஆகார். இனிப் பொய்கையாழ்வார் என்பார் சிலர். இவர் பக்தியில் பரமனைப் பாடியவர். இவர் கொலையும் புலால் மணமும் குடிகொண்

டிருக்கும் போர்க்களத்தைப் பாடினர் என்பது சிறிதும் பொருந்தா நிலையாகும். பன்னிருபாட்டியல் முதலிய இலக்கண நூல்களில் காணப் பெறும் பொய்கையாரோ எனின் அதன் போக்கே இதற்கு ஏற்றதாக இல்லை. ஆதலின் இப்பொய்கை யார் அவர்களில் வேருனவர் எனக் கொள்க.

சங்ககாலப் பொய்கையார் வாழ் இடம் தொண்டி என்பர்; பொய்கையாழ்வார்க்குக் காஞ்சியாகும். இலக்கணப் பொய்கை யார் இடமோ தெரியவில்லை. ஆதலின் இவர் பதினெண் கீழ்க் கணக்கு ஆசிரியர்களைப்போல பாண்டிநாட்டினராக இருந்து, சோழனைப் பாராட்டினவர் என அமைதல் ஏற்றது என்க.

சமயநிலை: பொய்கையாரை ஆழ்வார்எனக்கொண்டு வைண வராக்குவர். கார்த்திகை விளக்கு பற்றிக் கூறுவதால் சைவரென் ருக்குவர். ஆனுல் இவர் எம்மதமும் சம்மதமாய்க்கொண் டவர் எனக் கொள்ளுதல் ஏற்புடைத்து.

காலம்: களவழி நாற்பது கொண்டவன் தஞ்சை விசயா லயன் எனக் குலோத்துங்கன் சோழனுலாவின் பழையவுரை கூறுகிறது. அதனுல் இவர் காலம் கி. பி. 850 - 900 என்பர். பிற உலாக்களின் உரைகள் இதனை வலியுறுத்தாதலினுல் அது பொருந்தாதென்க. கார் நாற்பதின்பின் அமைத்திருப்பதாலும், சங்ககாலமுதல் விசயாலயனுக்கு முன்னுள்ள சோழரின் பழைய போர்நிலைகளைப் பொதுப்படக் கூறுவதால் இந்நூல் கி. பி. 775 - 800 வரை எனக் கூறப்பட்டது.

இனி கணைக்கால் இரும்பொறைக்கும் சோழன் செங்கணுனுக் கும் நடந்த போரில் செங்கணுன் வெற்றியுற்று, இரும்பொறை யைச் சிறையிலிட, அவனை மீட்கவேண்டிப் பொய்கையார் கள வழிபாடியதாகக் கூறுவர். இதனை உறுதிப்படுத்தச் சங்கநூல் களில் ஒன்றும் காணப் பெறவில்லை. செங்கணுனைப் பற்றி இடைக்கால நூல்களாலான தேவாரம் தேனெழுகப் பாடுகிறது. பெரிய புராணம் அடியார்களில் ஒருவராக்கி விட்டது. திருமங்கை யாழ்வார் அவனது போர்ச்சிறப்பைக் கூறுகிருர். திருமுறைகள் அவன் அமைத்த கோயிற்றிருப்பணிகளை விவரிக்கின்றன. அத ஞல் சங்ககால இரும்பொறையை கி. பி. ஏழாம் நூற்ருண்டில் வாழ்ந்த செங்கணுேடு பொருத்துதல் ஆய்வுக்கு ஏற்றதல்ல. இவைகளே இவனைக் கோச் செங்கன் என்று கூறுவதையும் அறிய வேண்டியது இன்றியமையாதது.

இந்நூலில் செங்கணான்; கோச்செங்கண் என்று ஓரிடத்தும் குறியாமல் இருப்பதை அறியவும். ஆனால் செங்கண்மால், செங்கட் சினமால் என வந்துளதை நோக்க, மால் எனும் சோழனின் பொதுப் பெயருக்கு முன் அடை மொழியாக செங்கண் வந்துளதையும் அறியலாம். இந்தப் பெயரொப்புமை கொண்டு முடிக்கும் முழந்தாளுக்கும் முடிச்சிடுவது ஆய்வுக்கு அழகல்ல என விடுக்க.

ஆகவே, இந்நூல் சோழர்களின் போர்நிகழ்ச்சிகளைப் பொதுவாகப் புகழ்ந்து பாடப்பட்டது. செங்கணானைப் புகழ்ந்ததுமல்ல; கணைக்கால் இரும்பொறையை மீட்டதுமல்ல. களவழியைப் பற்றித் தனிநூல் இல்லாத குறையை முதற்கண் யாத்துத் தந்த புலவராவர். அவர் மொழி வாழ்க.

### இரத்தப் புழுதி

போரில் பரந்து கிடக்கும் இரத்தத்தை யானை உழப்பதால் முற்பகலில் சேருகி, பிற்பகலில் பவளப் புழுதியாய் நிறைந்திடும்.

***நாள்ஞாயி(று) உற்ற செருவிற்கு வீழ்ந்தவர்;***
***வாள்மாய் குருதி களி(று)உழக்கத்,—தாள்மாய்ந்து***
***முற்பகல் எல்லாம் குழம்பாகிப், பிற்பகல்***
***துப்புத் துகளில் கெழூஉம்; புனல்நாடன்***
***தப்பியார் அட்ட களத்து.*** 1

**ப-ரை:** புனல் நாடன் - நீர்நிறைந்த நாட்டையுடைய சோழன், தப்பியார் - பிழை செய்தாரை (பகைவரை), அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, நாள் ஞாயிறு - சூரியன் உதித்த காலைப் பொழுதில், உற்ற - பொருந்திய, செருவிற்கு - போரில், வீழ்ந்தவர் - பட்டவர் மேல், வாள்மாய் - வாள் அழுந்தியதால் ஒழுகும், குருதி - இரத்தத்தை, களிறு - யானைகள், தாள் மாய்ந்து - (தன் தன்) காலால் அழுந்தி, உழக்க - கலக்குவதால், முன்பகல் எல்லாம் - பகலின் முதற் பொழுதெல்லாம், குழம்பு ஆகி - சேருகி, பின்பகல் - பகலின் பிற்பொழுதில், துப்பு துகள் இல் - பவளப் புழுதியைப் போல, கெழும் - பரந்து கிடக்கும்.

**க-ரை:** போரில் வீழ்ந்தவரின் உடலிலிருந்து ஒழுகும் இரத்தத்தை யானை மிதித்தலால், முற்பகலில் சேருகி, பிற்பகலில் பவளப் புழுதியாய்ப் பரந்து கிடக்கும்.

நாள் - காலை. செருவிற்கு - செருவில்; வேற்றுமை மயக்கம். மாய் - மறைதல். ஈண்டு அழுந்துதல் எனும் பொருளில் வந்துளது. துகள் - புழுதி; பொடி. கெழூஉம் - செய்யுளிசை நிறை அளபெடை. தப்பியார், வீழ்ந்தார் - வினையாலணையும் பெயர்கள். தப்பு + இன் + ஆர். இடைநிலை ஈறு கெட்டது.

### முரசு உமிழும் இரத்தம்

முரசின் உள்ளே சென்றிருந்த இரத்தம் வெளிவரல், மழை பெய்ய, நீர்த்தூம்பு வழியோடும் நீர்போலாகும்.

***ஞாட்பினுள் எஞ்சிய ஞாலம்சேர் யானைக்கீழ்ப்***
***போர்ப்(பு)இல் இடிமுரசின் ஊடுபோம் ஒண்குருதி,***
***கார்ப்பெயல் பெய்தபின்,[1] செங்குளக் கோட்டுக்கீழ்[2]***
***நீர்த்தூம்பு நீருமிழ்வ போன்ற; புனல்நாடன்***
***ஆர்த்(து)அமர் அட்ட களத்து.*** 2

---

பிற பாடம்: 1. பெய்தலின். 2. கோட்டக்கீழ்.

**ப-ரை:** புனல் நாடன் - நீர் வளப்பம் மிகுந்த நாட்டை யுடைய சோழன், ஆர்த்து - ஆரவாரத்துடன், அமர் - போரில், அட்ட - கொன்ற, களத்து - களத்திடத்து, ஞாட்பின் உள் - படையினுள், எஞ்சிய - மிஞ்சிய, ஞாலம் சேர் - நிலத்தை அடைந்த, யானை கீழ் - யானையின் கீழே கிடந்த, போர்ப்பு இல் – மேற்போர்வை இல்லாத, இடிமுரசின் - இடி போல் முழங்கும் முரசின், ஊடுபோம் - உள்ளே புகுந்த, ஒள் குருதி - ஒளியுடைய (புதிய) இரத்தம், (வெளிவருவது) கார் - கார் காலத்து, பெயல்-மழை, பெய்தபின்-பெய்தபின்பு, செங் குளம் - செந்நிறக்குளத்தினது, கோடு - கரையின், கீழ் - கீழுள்ள, நீர்த்தூம்பு - நீரையுடைய மதகுகள். நீர் - தண்ணீரை, உமிழ்வ - உமிழ்தலை, போன்ற - ஒத்திருந்தன.

**க-ரை:** போரில் யானைகளின் கீழேகிடக்கும் கிழிந்த முரசினுள்ளே சென்ற இரத்தம், வெளிவருவது மழை பெய்த உடன் செங்குளத்தின் நீர் தூம்புவழிச் செல்வதை நிகர்க்கும்.

போர்ப்பு - போர்வையைக் குறித்தது; ஆகு பெயர். போம் - போகும்; புகும். 'செய்யுமெனெச்ச வீற்றுயிர் மெய் சேறலும்' (நன்னூல் - சூ. 341) என்பதால் வந்தது கார் - மேகத்திற்காகி, பின் அது பெய்யும் பருவத்திற்காயது; இருமடி ஆகுபெயர். போன்ற - போல் என்ற இடைச்சொல் அடியாகப் பிறந்த வினை முற்று.

**கோடு ஊன்றி எழுதல்**

இரத்த வெள்ளத்தைக் கடப்போரின் கால்கள் தள்ளாடி வழுக்கலுற, தளர்ச்சியுற்றவர். ஆங்குள்ள யானைகளின் கொம்புகளை ஊன்றுகோலாய்க் கொண்டு, கரையேறுவர்.

***ஒழுக்கும் குருதி உழக்கித் தளர்வார்,***
***இழுக்கும் களிற்றுக் கோ(டு)ஊன்றி, எழுவர்;***
***மழைக்குரல் மாமுரசின் மல்குநீர் நாடன்***
***பிழைத்தாரை அட்ட களத்து.*** 3

**பரை:** மழைகுரல் - மேகத்தின் முழக்கத்தைப் போன்ற, மாமுரசின் - பெரிய முரசுகளையுடைய, மல்கு நீர் நாடன் - மிகுந்த நீர் வளப்பமும் நாட்டினையுமுடைய சோழன், பிழைத்தாரை - தப்பியவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, ஒழுக்கும் - வழிந்து ஒழுகுதலைச் செய்யும், குருதி - இரத்தத்தை, உழக்கி - (அதனைக் கடக்கும்

வீரர்கள்) கலக்குதலால், தளர்வார் - சோர்வுறுவோரை, இழுக்கும் - வழுக்குதலைச் செய்யும்(போது) களிற்றுக்கோடு - (அவர் ஆங்கு வெட்டுண்டு கிடக்கும்) யானைக்கொம்புகளை, ஊன்றி எழுவர் - ஊன்று கோலாகக் கொண்டு எழுந்து நடப்பர்.

**க-ரை:** போரின்கண் இரத்தவெள்ளத்தைக் கடக்க முற்படுவோர், வழுக்கி விழாதவாறு ஆங்குக் கிடக்கும் யானைக்கொம்புகளை ஊன்று கோலாகக் கொண்டு கடப்பர்.

ஒழுக்கும் - ஒழுகும் என்பதன் பிறவினை. இழுக்கும் - வழுக்கும். 'இழுக்கல் உடையுளி ஊற்றுக்கோலற்றே' (குறள்-415) என்பதை நோக்குக. இனி இழுக்கம் என்பதனை வெட்டுண்டு கிடக்கும் எனும் பொருளினும் உரைப்பர். மா, மல்கு - உரிச்சொல்.

**பருதி சுமந்த யானை**

தேரை முறித்து, தேருருளையைச் சுமந்து நிற்கும் யானை, சூரியனும் அத்தகிரியுமாய் விளங்கும்.

***உருவக் கடுந்தோர் முருக்கி,மற்(று) அத்தேர்ப்***
***பருதி சுமந்(து)எழுந்த யானை, — இருவிசும்பில்***
***செல்சுடர் சேர்ந்த மலைபோன்ற; செங்கண்மால்***
***புல்லாரை அட்ட களத்து.*** 4

**ப-ரை:** செங்கண்மால் - செங்கட் சோழன், புல்லாரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, உருவ - அஞ்சத்தக்க, கடுந்தேர் - விரைவுடைய தேரை, முருக்கி - அழித்து, அ தேர் பருதி - அந்தத் தேரின் உருளையினை, சுமந்து எழுந்து - தூக்கி நிமிர்ந்த, யானை - யானைகளின் (காட்சிகள்), இரு விசும்பு இல் - பெரிய வானத்தில், செல் சுடர் - செல்லுகின்ற சூரியனை, சேர்ந்த - அடைந்த, மலை போன்ற - மலையை ஒத்தன.

**க-ரை:** போர்க்களத்திடத்து தேர் உருளையை யானைகள் தூக்கி நிமிருவது சூரியன் அத்தகிரியை அடைவதை ஒக்கின்றது.

சுடர் - ஆகுபெயர். செல்சுடர் - வினைத்தொகை. உருவ - அச்சம்; உரு எனும் உரிச்சொல் ஈறு திரிந்தது. பருதி - வட்டம். மால் - சோழர்களுக்குள்ள பெயர்களில் ஒன்று. அவர் திருமால் வழிவந்தவராதலால் எழுந்த பெயர் என்பர்.

**செங் கரக்கை**

புண்களின் வாயில் எழும் இரத்தத்தைப் புகுந்து புகுந்து பருகும் காகம், மேலெல்லாம் இரத்தக் கறை படிய, உடல் செம்போத்தாயும், அலகு சிச்சிலிப் பறவையாயும் உருமாறி உலவும்.

*தெரிகணை எஃகம் திறந்தவாய் எல்லாம்*
*குருதி படிந்(து)உண்ட காகம், — உருஇழந்து,*
*குக்கில் புறத்த சிரல்வாய; செங்கண்மால்*
*தப்பியார் அட்ட களத்து,*

**ப-ரை:** செங்கண்மால் - செங்கட் சோழன், தப்பியார் - பிழைத்தாரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, தெரி - ஆராய்ந்த, கணை - அம்புகளாலும், எஃகம் - வேல்களாலும், திறந்த - திறக்கப்பட்ட, வாய் எல்லாம் - (புண்களின்) வாயெல்லாம், குருதி - இரத்தத்தில், படிந்து - தோய்ந்து, உண்ட காகம் - (அதை) பருகிய காகங்கள், உரு இழந்து - நிறம் மாறி, குக்கில் - செம்போத்தின், புறத்த - வெளிநிறம் உடையவாகியும், சிரல் - சிச்சிலிப் பறவைபோன்ற, வாய - நிறமுடைய அலகையும் உடையவாயின.

**க-ரை:** போரின்கண் குருதியைப் பருகிய காகங்கள் உடல் செம்போத்தின் நிறத்தையும், அலகு சிச்சிலிப் பறவையின் நிறத்தையும் பெற்று உருமாறித் திரிந்தன.

தெரிகணை - வினைத்தொகை. எஃகம் - வாள், வேல் முதலியவற்றைக் குறிக்கும் பல பொருள் ஒரு சொல். வாயெல்லாம் - எல்லா வாயும்; இலக்கணப் போலி. குக்கில் - செம்போத்து. சிரல் - மீன் கொத்திப் பறவை. புறத்த என்றதனால் வெளிப் புறம் மாறினதேயன்றி உட்புறம் மாறவில்லை என்ற நகைச் சுவை வெளிப்படுகிறது.

**யானை அடுக்கு**

எங்கும் பிணக்குவியல். எங்கும் ஒன்றன் மேல் ஒன்றாக யானைகளின் உடல்களினது. காட்சிகள், இடி விழச் சிதறிய புதர்கள்போல் கிடப்பதை ஒத்தன.

*நாஞல் திசையும் பிணம்பிறங்க, யானை*
*அடுக்குபு ஏற்றிக் கிடந்த; — இடித்(து) உரறி*
*அங்கண் விசும்பின் உரும்எறிந்(து), எங்கும்*
*பெருமலைத் தூ(று)எறிந்(து) அற்றே; அருமணிப்*

***பூணேந்(து) எழின்மார்(பு) இயல்திண்தேர்ச் செம்பி***
***வேந்தரை அட்ட களத்து. [யன்தெவ்***

**ப-ரை:** அருமணி - அரிய மணிகள் (பதித்த), பூண் - அணியை, ஏந்து - (விளங்கும்படி) ஏந்திய, எழில் - அழகுடைய, மார்பு - மார்பையும், திண் - வலிமையுடன் உடைய, இயல் - செய்யப்பட்ட, தேர் - தேரையுமுடைய, செம்பியன் - சோழன், தெவ் வேந்தரை - பகை அரசரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, நால்நால் திசையும்-எட்டுத் திசைகளிலும், பிணம் பிறங்க - பிணங்கள் கிடக்க, யானை - யானைகள், அடுக்குபு - அடுக்கப்பட்டு, ஏற்றிக் கிடந்த - (ஒன்றன்மேல் ஒன்றாக) ஏற்றிக் கிடந்த காட்சி, இடித்து - இடித்து, உரறி முழங்கி, அம்கண் - பரந்த ஆகாயத்தினின்று, உரும் எறிந்து - இடி வீழ்ந்து, பெருமலை எங்கும் - பெரிய மலையிடமெங்கும் உள்ள, தூறு எறிந்து - புதர்களைப் பெயர்த்து வீசியதை, அற்று - (ஒன்றன்மேல் ஒன்றாய்க் கிடப்பதைப்) போன்றதாகும்.

**க-ரை:** யானைகள் போரிடத்து அடுக்கியும் சிதறியும் கிடத்தல் பெரிய மலையிடத்து இடி வீழ்ந்து புதர்களைப் பெயர்த்தெறிந்து கிடக்கும் காட்சியை ஒத்தனவாம்.

'அடுக்குபு ஏற்றி' — உகரம் உயிர் வரக் கெடாது புணர்ந்தது. தூறு - புதர்.

**செங்குன்று**

கரிய நிறமுள்ள யானைகளின் உடல் முழுதும் குருதி படிந்தது செங்குன்றைப் போல காட்சியளித்தன.

***அஞ்சனக் குன்(று)ஏய்க்கும் யானை, அமருழக்கி,***
***இங்கு லிகக்குன்றே போல்தோன்றும்;-செங்கண்***
***வரிவரால் மீன்பிறழும் காவிரி நாடன்***
***பொருநரை அட்ட களத்து. 7***

**ப-ரை:** செம்கண் - சிவந்த கண்ணையும், வரி - புள்ளிகளையுமுடைய, வரால் மீன் பிறழும் - வரால் மீன் பிறழும், காவிரி நாடன் - காவிரி பாயும் நாட்டையுடைய சோழன், பொருநர் - (தன்னோடு) போர் புரிவாரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, அஞ்சனம் - மைநிறமுடைய, குன்று - மலையை, ஏய்க்கும் - ஒக்கும், யானை - யானைகள் அமர் உழக்கி - போரின்கண் கலக்கி, இங்குலிகக் குன்று போல் -

சாதிலிங்க மலையைப் போல, தோன்றும் - (யானை உடலெல்லாம் இரத்தக் கறை படிந்துள்ள சிவந்த நிலை) காட்சிதரும்.

**க-ரை:** போரில் இரத்த வெள்ளத்தில் படிந்த யானைகளின் தோற்றம் செந்தூர மலையை ஒத்திருந்தன.

அஞ்சனம் - கருமை நிறம். ஏய்க்கும் – உவம உருபு. இங்குலிகம் - சாதிலிங்கம்; இது செம்மை நிறம் பெற்ற ஒரு விடப் பொருள். வரி வரால் - வேற்றுமைத் தொகை. வரி - புள்ளி.

**மெய் மறைத்த அம்புகள்**

யானையோடு யானை நெருங்கி நிற்க, அவைகள் மேல் அம்புகள் பாய்ந்து, உடலை மறைத்து நிற்கும் காட்சி, குருவிக் கூட்டம் மலைமேல் அமர்ந்து, அம் மலையை மறையச் செய்ததை ஒத்திருக்கும்.

***யானைமேல் யானை நெரிதர ஆனாது,***
***கண்நேர் கடுங்கணை மெய்ம்மாய்ப்ப;—எவ்வாயும்***
***எண்அருங் குன்றில் குரீஇஇனம் போன்றவே;***
***பண்ஆர் இடிமுரசின் பாய்புனல் நீர்நாடன்***
***நண்ணுரை அட்ட களத்து,*** 8

**ப-ரை:** பண் ஆர் - அலங்கரிக்கப்பட்ட, இடிமுரசு இன் - இடி ஒலியுற்ற முரசினைப் போல, பாய்புனல் - (ஒலியுடன் பாய்ந்து) பரந்து செல்லும் நீரினையுடைய, காவிரி நாடன் - காவிரிபாயும் நாட்டையுடைய சோழன், நண்ணுரை-பகைவரை, அட்ட - கொன்ற, களத்து-போர்க்களத்திடத்து, யானை மேல் யானை – யானைகள் மேல் யானைகள், நெரிதர - நெரிந்து, ஆனாது - நீங்காமல், கண் நேர் - கண்களை ஒக்கும், ஓடும் கணை - கூர்மையான அம்புகள், எ வாயும் - எவ்விடத்தும் (பாய்தலால்), மெய் - (அந்த யானைகளின்) உடலை, மாய்ப்ப - (அவ்வம்புகள்) மறைத்தலால், குன்றில் – மலைகளில், எண் அரு - அளவில்லாத, குரீஇ இனம் - குருவியின் கூட்டங்கள் (அமர்ந்திருத்தலை), போன்ற - ஒத்திருந்தன.

**க-ரை:** போரில் யானைகளின் உடல் முழுதும் அம்புகள் தைத்து உடலை மறைத்திருந்த காட்சி, மலைகளின்மேல் குருவிக் கூட்டம் அமர்ந்திருந்ததை ஒத்திருந்தனவாம்.

குரீஇ - இயற்கையளபெடை. ஒலியுடன் பாய்ந்து செல்லும் நிலையை இடிமுரசின் என்றார்.

**பிறழும் சுருக்கள்**

வெட்டப் பட்ட காலில் சோடு இல்லை. இரத்த வெள்ளம் அதனை இழுக்க, அவை பிறழ்ந்த காட்சி கடலிடைச் சுருக்கள் பிறழ்வதை நிகர்த்தன.

***மேலோரைக் கீழோர் குறுகிக் குறைத்திட்ட***
***காலார்சோ(டு) அற்ற கழற்கால், இருங்கடல்***
***ஊணில் சுறபிறழ்வ போன்ற; புனல்நாடன்***
***நேரரரை அட்ட களத்து. 9***

**ப-ரை:** புனல் நாடன் - நீர்வளமுடைய நாட்டை யுடைய, சோழன், நேரரரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, மேலோரை - (யானை, குதிரை, தேர் முதலியவற்றின்) மேல் இருந்தவரை, கீழோர் - கீழிருந்த காலாட்கள், குறுகி - அணுகி, குறைத்திட்ட - துணித்த. கால் ஆர் சோடு - காலில் இட்ட மிதியடி, அற்ற - நீங்கிய, கழல் கால் - வீரக்கழல் அணிந்த கால்கள், இரும்கடல் - பெரிய கடலுள், ஊண் இல் - இரையில்லாத, சுற - சுருமீன்கள், பிறழ்வ – பிறழ்வதை, போன்ற - ஒத்தன.

**க-ரை:** போரில் வீரர்கள் கால்கள் வெட்டுண்டு இரத்த வெள்ளத்தில் கிடப்பன, கடலில் சுருமீன்கள் பிறழ்வதைப் போன்றன.

மேலோர், கீழோர் - என்பன இடத்தைக் குறித்தன. சுற - சுரு; 'குறியதன் கீழாக் குறுகலும்'— (நன்னூல் — சூ. 172) என்பதால் பெற்றது. ஊணில் - என்பதால் இரை தேடச் செல்லலை உணர்த்திற்று. இரையில்லா காலத்து சுரு வெளிப் போந்து திரியும் என்பதும் அறியப்படுகிறது. சோடு - சுவடு என்பதன் மரூஉ. சுவட்டில் அணியும் செருப்பைச் சோடென்றல் காரணப் பெயர். போருக்குச் செல்வோர் சோடணிந்து செல்வது மரபெனவும் தெரிகிறது.

**செம்மண் குன்று**

யானையின் உடல்முழுவதும் அம்புகளால், இரத்தவெள்ளத்தில் தோய்ந்து, அசையாது நிற்கும் காட்சி, செம்மண் குன்றுபோல் இருந்தன.

***பல்கணை எவ்வாயும் பாய்தலால் செல்கலா(து),***
***ஒல்கி உயங்கும் களிறெல்லாம்,—தொல்சிறப்பில்***
***செவ்வல்அம் குன்றம்போல் தோன்றும்; புனல்நாடன்***
***தெவ்வரை அட்ட களத்து. 10***

**ப-ரை:** புனல் நாடன் - நீர் வளப்பமுடைய நாட்டை யுடைய சோழன், தெவ்வரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, பல் கணை - பல அம்புகளும், எ வாயும் - (உடம்பின்) எல்லாவிடத்தும், பாய்த லின் - பாய்தலால், செல்கலாது - மேலே செல்ல முடியாமல், ஒல்கி - தளர்ந்து, உயங்கும் - வருந்தும், களிறு எல்லாம் - யானைகள் எல்லாம், தொல்சிறப்பின் - தொன்று தொட்டு வரும் சிறப்பினையுடைய, செவ்வல் குன்றம் போல் - சிந்தூர மலையைப்போல, தோன்றும் - காட்சியளிக்கும்.

**க-ரை:** *யானைகளின் உடலில் அம்புகள் பாய்ந்து, இரத் தம் ஒழுகி, அசையா நிற்கும் காட்சி, சிந்தூர மலையை ஒத்தனவாம்.*

செவ்வல்-செம்மண் நிலம்; பண்புப் பெயர். அம்குன்றம் - *அம்சாரியை.* செல்கலாது-செல் + கு + அல் + ஆ + து; - கு *சாரியை.*

**உருளும் முரசு**

*வீரர் விட்டுப் போன முரசம், குருதியில் நீராடி நிற்கும். போரின்றித் திரியும் யானை, அதுவும் கண்ணில்லாதது. தட்டப்படும் முரசைத் தன் காலால் உதைத்தலால் உண் டாகும் ஒலி, மழையென முழங்கும்.*

***கழுமிய ஞாட்பினுள் மைந்(து)இகந்தார், இட்ட***
***ஒழிமுரசம், ஒண்குருதி ஆடித்,—தொழில்மடிந்து,***
***கண்காணா யானை உதைப்ப, இழுமென***
***மங்குல் மழையின் அதிரும்; அதிராப்போர்ச்***
***செங்கண்மால் அட்ட களத்து.*** *11*

**ப-ரை:** அதிரா போர் - கலங்காத தன்மை கொண்ட போரையுடைய, செங்கண்மால் - செங்கட் சோழன், அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, கழுமிய - நெருங் கிய, ஞாட்பினுள் - போரில், மைந்து - வலி, இகந்தார் - இழந்தவர்கள், இட்ட - விட்டுவிட்ட, ஒழி - உபயோகமற்ற, முரசம் - முரசங்கள், ஒள் குருதி - புதிய இரத்தத்தில், ஆடி - தோய்ந்து, தொழில் மடிந்து-தொழிலைத் தவிர்த்துக்கிடப்பதை, கண்காணா - கண் (போர்க்கருவிகள் பட்டு) பார்வையில்லா, யானை உதைப்ப - யானைகள் உதைத்தலால் (எழும் ஒலி), மங் குல் மழையின் - மிக்கமேகத்தால் தோன்றும் இடி போல. இழும் என அதிரும் - இழுமென்ற ஓசையுடன் முழங்கும்.

16

**க-ரை:** போரில் வீரர் விட்டுவிட்ட முரசங்களைக் கண் இழந்த யானைகள் உதைத்தலால் உண்டாகும் ஓசை மேகத்தின் ஓசையை ஒத்திருக்கும்.

ஒழிமுரசம் - வினைத்தொகை. மங்குல் மழை - ஒரு பொருட் பன்மொழி. அதிரா - கலங்காத. கண்காணு - குருடு. 'மைந்து இகந்தார்' — தோற்றவரைக் குறித்தது. தொடர்ந்து இடிப்பதை இழுமென்றார்.

**தீவாய்க் குருதி**

விடாது கணை பாய, குருதி ஒழுக, வேழம் விழாது நிற்பது, செம்மண் குன்றில் மழை சொரிய ஓடும் செந்நீராய்க் காட்சி தந்தன.

***ஓவாக் கணைபாய, ஒல்கி, எழில்வேழம்***
***தீவாய்க் குருதி இழிதலால், செந்தலைப்***
***பூவல்அம் குன்றம் புயற்(கு)ஏற்ற போன்றவே;***
***காவிரி நாடன் கடாஅய்க் கடிதாகக்***
***கூடாரை அட்ட களத்து.*** 12

**ப-ரை:** காவிரி நாடன்-காவிரியின் வளம் பெற்ற நாட்டையுடைய சோழன், கடாய் - (படைகளைச்) செலுத்தி, கடிது ஆக - விரைவாக, கூடாரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, ஓவா - இடைவிடாமல், கணை - அம்புகள், பாய - தைக்க, எழில் - எழுச்சியையுடைய, வேழம் - யானைகள், ஒல்கி - தளர்ந்து, தீவாய் - தீயின் நிறங்கொண்ட, குருதி - இரத்தத்தை, இழிதலால் - ஒழுக்குதலால், செம்தலை - சிவந்த இடத்தையுடைய, பூவல் குன்றம் - செம்மண் மலைகள், புயற்கு - மழைக்கு, ஏற்ற - எதிர்ந்ததை, போன்ற - ஒத்தன.

**க-ரை:** போரில் அம்புதைத்து இரத்தம் ஒழுகும் யானையின் தோற்றம், செம்மண் மலைமீது மழை பெய்தலால், அதனிடமிருந்து ஓடும் செந்நீரை நிகர்க்கும்.

பூவல் - செம்மண்; 'பூவலூட்டிய புனைமாண் பந்தர்' எனும் சிலப்பதிகார அடிகளை நோக்குக. அம் - சாரியை. கடாஅ - சொல்லிசையளபெடை.

**துடிக்கும் துதிக்கை**

வீரர் வெட்டிய துதிக்கைகள், துடித்துப் புரளும் காட்சிகள், இடி ஒலிகேட்ட நாகங்கள் துடித்துப் புரளுவ போன்றன.

*நிரைகதிர் நீள்எஃகம் நீட்டி, வயவர்*
*வரைபுரை யானைக்கை நூற, — வரைமேல்*
*உருமெறி பாம்பின் புரளும்; செருமொய்ம்பின்*
*சேஎய்பொரு(து) அட்ட களத்து.* 13

**ப-ரை:** செரு - போர், மொய்ம்பின் - வலியையுடைய, சேய் - சோழன், பொருது - போரிட்டு, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, வயவர் - வீரர்கள், நிரைகதிர் - திரண்ட ஒளியையுடைய, நீள் - நீண்ட, எஃகம் - வாளை, நீட்டி - செலுத்தலால், வரை புரை - மலையை ஒத்த, யானை கை - யானைகளின் கைகளாகிய துதிக்கைகளை, நூற - துணிக்க, வரைமேல் - மலையிடத்து, உரும் - இடி, எறி - வீழுந்த (அதிர்ச்சியால்), பாம்பு இன் - பாம்பைப்போல, புரளும் - (அக் கைகள்) புரளுமாம்.

**க-ரை:** போர் வீரர்கள் வாளால் வெட்டிய துதிக்கைகள் துள்ளித் துள்ளிக் குதிக்கும் காட்சி, இடியின் அதிர்ச்சி கேட்டு எழும்பிப் புரளும் பாம்பை ஒக்குமாம்.

நீட்டி - ஈட்டி, வேல், வாள் முதலியவற்றை வீசிச் செலுத்தல். சேஎய் - இன்னிசையளபெடை.

**பவளம் சொரியும் பை**

யானையின் துதிக்கையை வெட்டி வீழ்த்தவும், குருதி சொரியும் துதிக்கை, பவளம் சொரியும் பைபோலாகும்.

*கவளம்கொள் யானையின் கைதுமிக்கப்[1] பட்டுப்,*
*பவளம் சொரிதரு பைபோல்; — திவளொளிய[2]*
*ஒண்செங் குருதி உமிழும்; புனல்நாடன்*
*கொங்கரை அட்ட களத்து.* 14

**ப-ரை:** புனல்நாடன் - நீர் வளப்பம் நிறைந்த நாட்டை யுடைய சோழன், கொங்கரை - கொங்குநாட்டவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, கவளம்

பிற பாடம்: 1. கைதுணியப், 2. திகழொளிய.

கொள் - கவளம் கவளமாக உணவைக் கொள்ளும், யானை - யானைகளின், கை - துதிக்கைகள், துமிக்கப்பட்டு - துண்டிக் கப்பட்டவுடன், பவளம் - பவளத்தை, சொரிதரு - சொரி கின்ற, பைபோல - பையைப்போல, திவள் ஒளிய - மிக்க ஒளியையுடைய, ஒள் - ஒளி பொருந்திய, செம் குருதி - சிவந்த இரத்தத்தை, உமிழும் - கக்கும்.

**க-ரை:** போரில் யானைகளின் துதிக்கைகள் வெட்டப் பட, அத் துதிக்கைகளில் இருந்து வெளிவரும் இரத்தம், பவளத்தைச் சொரியும் பைபோல இருந்தன.

கவளம் - யானையின் ஒரு வாயுணவு; 'வாங்குங் கவ ளத்து ஒருசிறிது வாய் தப்பின்' (புறம் 101, - அடி 7.) என்பதால் அறிக. யானையின் - இன் - சாரியை. திவள் - விளங்குதல். ஒண் செங்குருதி - புதிய இரத்தத்தைக் குறித் தது.

### தொழிற்பள்ளி

தச்சன் ஒரு தொழிலாளி. அவன் தொழில் புரியும் போது துணை புரியும் கருவிகள் ஆங்காங்கு கிடக்கும் காட்சி குடைகள் போரில் சிதைந்தும், பிணங்கள் எப்பக்கமும் கிடப்பதையும் ஒத்திருந்தன.

***கொல்யானை பாயக், குடைமுருக்கி எவ்வாயும்***
***புக்கவாய் எல்லாம் பிணம்பிறங்கத்—தச்சன்***
***வினைபடு பள்ளியில் தோன்றுமே; செங்கண்***
***சினமால் பொருத களத்து.*** [1] ***15***

**ப-ரை:** சினம் - கோபத்தையுடைய, செங்கண்மால் - செங்கட் சோழன், பொருத - போர்செய்த, களத்து - களத் திடத்து, எ வாயும் - எல்லா இடங்களிலும், கொல்யானை - கொல்லும் யானைகள், பாய் - பாய்தலினால், குடை முருக்கி - குடைகளை அழித்தும், புக்கவாய் எல்லாம் - (அவ் யானைகள்) புகுந்த இடங்களில் எல்லாம், பிணம் பிறங்க - பிணங்கள் விளங்கவும் செய்த செயலானது, தச்சன் - தச்சனால், வினை படு - தொழில் செய்யப்படும், பள்ளி இல் - இடங்களைப்போல, தோன்றும் - காணப்படும்.

---

பிற பாடம்: 1. களம்.

**க-ரை:** போரில் யானைகள் பகைவரின் குடைகளை அழித்தும், ஆங்காங்கு பிணங்கள் கிடப்பதும், தச்சன் தொழிலாற்றும் இடத்துக் கிடக்கும் கருவிகளை ஒத்திருந் தனவாம்.

புக்க - 'புகு' இரட்டித்து இறந்தகாலம் காட்டிற்று. பள்ளி-இடம்; 'சொல்லிய பள்ளி' (தொல்-எழு. சூ. -100) என் பதால் அறிக. குடைகள் கருவிகளையும் பிணங்கள் மரங்களையும் குறித்தன.

**வேங்கை பாயும் வியன் குன்று**

போரில் குதிரைகள் யானைகளின் மத்தகத்தில் தாவுவது வேங்கைப் புலிகள் மலையிடம் பாய்தலை ஒத்தன.

***பரும இனமாக் கடவித், தெரிமறவர்***
***ஊக்கி எடுத்த அரவத்தின் ஆர்ப்(பு),அஞ்சாக்***
***குஞ்சரக் கும்பத்துப் பாய்வன; குன்(று)இவரும்***
***வேங்கை இரும்புலி போன்ற; புனல்நாடன்***
***வேந்தரை அட்ட களத்து.*** ***16***

**ப-ரை:** புனல் நாடன் - நீர் வளப்பம் நிறைந்த நாட்டை யுடைய சோழன், வேந்தரை - பகை அரசர்களை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, பருமம் - சேணம் பூட்டப்பட்ட, இனம் மா - மிகுந்த குதிரைகள், தெரி - (குதிரைகளின் திறம்) தெரிந்த, மறவர் - வீரர்களால், கடவி - செலுத்தற்கு, ஊக்கி எடுத்த - உற்சாகமூட்டி எழுப்பப்பட்ட, அரவத்தின் ஆர்ப்பு - மிக்க ஆரவாரத்திற்கு, அஞ்சா - (கேட்டு) அஞ்சாத, குஞ்சரம் - யானைகளின், கும்பத்து - மத்தகத்தில், பாய்வன - (குதிரைகள்) பாய்கின்ற செயல்கள், குன்று - மலையி னிடம், இவரும் - பாய்கின்ற. இரு - பெரிய, வேங்கைப்புலி – வேங்கையாகிய புலியை, போன்ற - ஒத்தன.

**க-ரை:** போரின்கண் குதிரைகள் யானைகளின் மத்த கத்தில் பாயும் காட்சி வேங்கை வியன்மலையிடம் தாவலை நிகர்த்தனவாம்.

பருமம் - சேணம்.

**கார்த்திகை விளக்கு**

வீரரும் வீரரும் போரிட, அவர் அங்கமெலாம் சிந்தும் இரத்தம் கார்த்திகைத் தீபக் காட்சியாய் விளங்கும்.

*ஆர்ப்(பு)எழுந்த ஞாட்பினுள் ஆளாள் எதிர்த்(து)*
*தாக்கி எறிதர, வீழ்தரும் ஒண்குருதி [ஓடித்*
*கார்த்திகைச் சாற்றில் கழிவிளக்கைப் போன்றனவே;*
*போர்க்கொடித் தானைப் பொருபுனல் நீர்நாடன்*
*ஆர்த்(து)அமர் அட்ட களத்து.* 17

**ப-ரை:** போர் - போர்க்குரிய, கொடி - கொடியையுடைய, தானை - படைகளைக்கொண்டவனும், பொரு - மோதுகின்ற, புனல் - நீர்மிகுந்த, நீர் நாடன் - காவிரி நாட்டையும் உடைய சோழன், ஆர்த்து - ஆரவாரித்து, அமர் - போரில், அட்ட - கொன்ற, களத்து - களத்திடத்து, ஆர்ப்பு எழுந்த - ஆரவாரம் மிகுந்த, ஞாட்பின் உள் - போரின்கண், ஆள் ஆள் - வீரரும் வீரரும், எதிர்த்து ஓடி - எதிர் சென்று ஓடி, தாக்கி - (ஒருவரை ஒருவர்) பொருதவிடத்து. எறிதர - (படைகளை) வீசுதலால், வீழ்தரும் - சொரிகின்ற, ஒள் குருதி - ஒள்ளிய இரத்தமானது, கார்த்திகை சாறு இல் - கார்த்திகை விழாவின்போது, கழிவிளக்கை - (ஏற்றப்படும்) மிக்க விளக்கினை, போன்றன - ஒத்தன.

**க-ரை:** போரில் வீரர்கள் ஒருவரை ஒருவர் படைகளால் வீச, அதனுல் உண்டாகும் இரத்தக் காட்சி கார்த்திகை விழாவில் இட்ட விளக்கினை ஒக்குமாம்.

*சாறு - விழா; 'சாறயர் களத்து' என்னும் (283 - அடி.) முருகாற்றுப் படையான் அறிக.*

**அலை இழுக்குந் தோணி**

கடல் அலைகள் கரையில் உள்ள தோணியை இழுத்திடும் காட்சிபோல இரத்த வெள்ளம் பிணங்களை இழுத்திடும்.

*நளிந்த கடலுள் திமில்திரை போலெங்கும்*
*விளிந்தார் பிணங்குருதி ஈர்க்கும்;—தெளிந்து*
*தடற்றிடம் கொள்வாள் தனைஅவிழும் தார்ச்சேய்*
*உடற்றியார் அட்ட களத்து.* 18

**ப-ரை:** தெளிந்து - ஒளி விளங்கிநிற்கும், தடறு இடம் கொள் - உறையிடத்தைக்கொண்ட, வாள் - வாளினையும், தார் - மாலையினையும் உடைய, சேய் - சோழன், உடற்றியார் - சினமூட்டிய பகைவரை, அட்ட - கொன்ற, களத்து -

போர்க்களத்திடத்து, நளிந்த - நீர் செறிந்த, கடல் உள் - கடலில், திமில் - தோணியையும், திரை - அலையையும், போல் - போல, எங்கும் - எல்லாவிடத்தும், விளிந்தார் - இறந்தாருடைய, பிணம் - பிணங்களை, குருதி ஈர்க்கும் - இரத்தமானது இழுக்கும்.

**க-ரை:** போரில் கிடக்கும் பிணங்களை இரத்த வெள்ளம் இழுக்கும் காட்சி தோணிகளை அலைகள் இழுப்பதை ஒக்குமாம்.

நளிந்த - நளி எனும் அடியாகப் பிறந்த பெயரெச்சம். கொள்வாள் - வினைத்தொகை. தளை - கட்டு; பூ அரும்பின் மொக்கு அல்லது மொட்டைக் குறிக்க வந்த பெயர்ச் சொல்.

முக்கொம்பு யானை

வீரர் எய்தவேல் யானையின் கொம்புகட்கிடையே சொருகிநிற்கும் காட்சி முக்கொம்பு யானையென மாறி நிற்கும்.

***இடைமருப்பின் விட்(டு)எறிந்த எ:கம்,கால் மூழ்கிக்***
***கடைமணி காண்வரத் தோற்றி,—நடைமெலிந்து,***
***முக்கோட்ட போன்ற களிறெல்லாம் நீர்நாடன்***
***புக்(கு)அமர் அட்ட களத்து.*** 19

**ப-ரை:** நீர் நாடன் - நீர்வளப்பம் நிறைந்த நாட்டையுடைய சோழன், அமர்புக்கு - போரில்புகுந்து, அட்ட - (பகைவர்களைக்) கொன்ற, களத்து - களத்திடத்து, மருப்பின் - (யானைகளின்) தந்தங்களின், இடை - நடுவே, விட்டு எறிந்த - வீசியெறிந்த, எஃகம் - வேலின், கால் மூழ்கி - (நுனி) காம்பு உட்புகுதலால், கடைமணி - (அவ்வேலின்) கடைப் பகுதி, காண்வர - விளங்க, தோற்றி - தோன்றுவதானது, களிறு எல்லாம் - களிறுகளெல்லாம், நடைமெலிந்து - நடை தளர்ந்து, முக்கோட்ட - மூன்று கொம்புகளையுடைய யானைகளை, போன்ற - ஒத்தன.

**க-ரை:** போரில் வீரர்கள் எறிந்த வேலின் நுனிப்பகுதி யானையின் இரு கொம்புகளுக்கிடையில் உட்புகுந்து நிற்கும் காட்சி மூன்று கொம்புகளையுடைய யானைகளை ஒத்தன.

மூழ்கல் - மூழ்கினத் திரிந்தது. முக்கோட்ட - குறிப்பு வினைப்பெயர். காண்வர - ஒரே சொல். கால் - காம்பு; ஈண்டு நுனிப்பகுதி.

**கழுகும் பிணமும்**

இருசிறகையும் பரப்பிக் கொண்டு, பிணம் தின்னும் கழுகுகளின் காட்சி, முழவு வாசிப்போனை நிகர்க்கும்.

*இருசிறகர் ஈர்க்குப் பரப்பி, எருவை*
*குருதி பிணம்கவரும் தோற்றம்,—அதிர்விலாச்*
*சீர்முழாப் பண்அமைப்பான் போன்ற புனல்நாடன்*
*நேராரை அட்ட களத்து.* 20

**ப-ரை:** புனல் நாடன் - நீர் வளப்பம் நிறைந்த நாட்டினை யுடைய சோழன், நேராரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, எருவை-கழுகுகள், இருசிறகர் - இரண்டு சிறகிடமுள்ள, ஈர்க்கு பரப்பி - ஈர்க்கைப் போன்ற இறகுகளைப் பரப்பிக்கொண்டு, குருதி - உதிரத்தோடு, பிணம் - பிணங்களை, கவரும் - அகப்படுத்தும், தோற்றம் - காட்சி யானது, அதிர்வு இலா-அதிர்ச்சி இலாத, சீர் - ஓசையையுடைய, முழா - முழவினை, பண் அமைப்பான் - பண் அமைப்பவனை, போன்ற - ஒத்தன.

**க-ரை:** போரிடம் கழுகுகள் சிறகை பரப்பிக்கொண்டு, இரத்தத்தோடு பிணங்களைத் தின்னும் காட்சி, முழவு வாசிப்பவனை ஒத்திருந்தனவாம்.

சிறகர் - ஈற்றுப்போலி. ஈர்க்கு - ஈண்டு ஈர்க்குப்போன்ற இறகைக் குறித்தது. பண் அமைப்பான் - மத்தளம் வாசிப் பவன், வாசிக்கும்போது உள்ள நிலையை உணர்த்திற்று. அதிர்வு இலா சீர் - மென்மையான ஓசை.

**பாகரிலா யானை**

வேல் உடலிற் பாய, புண் மிக, பாகரில்லாததாய் கால், கிளறி, சாய்ந்த யானையின் காட்சி ஒரு சிறுகுன்றை ஒத்திருந்தது.

*இணைவேல் எழில்மருமத்(து) இங்கப்,புண் கூர்ந்து*
*கணை அலைக்(கு) ஒல்கிய யானை,—துணையிலவாய்த்*
*தொல்வலி ஆற்றித் துளங்கினவாய், மெல்ல*
*நிலம்கால் கவரும் மலைபோன்ற; செங்கண்*
*சினமால் பொருத களத்து.* 21

**ப-ரை:** சினம் - கோபத்தையுடைய, செங்கண்மால் - செங்கட்சோழன், பொருத - போர்செய்த, களத்து - களத்தி

டத்து, இணைவேல் - ஒத்தவேல்கள் பல, எழில் - அழகிய, மருமத்து - மார்பில், இங்க - அழுந்துதலால், புண்கூர்ந்து - புண்மிகுந்து, கணை - அம்புகளின், அலைக்கு - அசைவுகளால், ஒல்கிய - தளர்ந்த, யானை - யானைகள், துணை இலவாய் - பாகரை இலதாய், தொல்வலி - பழமை (முன்) வலியை, ஆற்றி - பொறுத்து, துளங்கினவாய் - நடுங்கியவாறு, மெல்ல - மெது வாக, நிலம் - பூமியை, கால் - காலாலே, கவரும் - அகப் படுத்தலானது, மலை - குன்றுகளை, போன்ற - ஒத்தன.

**க-ரை:** போரில் யானைகள் பாகரில்லாது, தன் புண் மீது உள்ள அம்புகள் அசைதலால் உண்டாகும் வலிக்கு ஆற்ருது நடுங்கியவாறு, நிலத்திடைக் கிடப்பது சிறு குன்றுகளை ஒத்திருந்தன.

இங்கல் - அழுந்தல். அலை - அலைதல்: முதனிலைத் தொழிற்பெயர். அலைக்கு - அலைகளால் - வேற்றுமை மயக் கம். கவரும் - அகப்படுத்தும் (காலால் கீண்டிப்படுத்தல்). துளங்கல் - நடுங்கல்.

## குடைக்கீழ் துதிக்கை

வீரர்கள் விட்டுப்போன குடைக்கீழ் வெட்டுண்ட துதிக்கை ஒட்டிக்கிடக்கும் காட்சி, மதியை மறைக்கும் மாநாகம் ஒக்கும்.

***இருநிலம் சேர்ந்த குடைக்கீழ் வரிநுதல்***
***ஆ(டு)இயல் யானைத், தடக்கை ஒளிறுவாள்***
***ஓடா மறவர் துணிப்பத், துணிந்தவை,***
***கோடுகொள் ஒண்மதியை[1] நக்கும்பாம்(பு)[2] ஒக்குமே;***
***பாடார் இடிமுரசின் பாய்புனல் நீர்நாடன்***
***கூடாரை அட்ட களத்து.*** **22**

**ப-ரை:** பாடு ஆர் - ஒலிநிறைந்த, இடி - இடிபோன்ற, முரசின் - முரசினையுடைய, பாய்புனல் - பரந்த நீர்மிகுந்த, நீர்நாடன்-காவிரிநாட்டையுடையவனுகிய சோழன், கூடாரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத் திடத்து, ஒளிறுவாள் - ஒளிமிகும் வாளைக்கொண்ட, ஓடா மறவர் - புறங்கெடாத வீரர்கள், வரி நுதல் - வரிகள் (சுருக்கம்) நிறைந்த நெற்றியையும், ஆடு இயல் - அசை

பிற பாடம்: 1. ஒண்மதிய. 2. நக்குபாம்பு.

தலையும் உடைய, யானை - யானையின், தடகை - துதிக் கைகள், துணிப்ப - துண்டிக்கப்பட, துணிந்தவை - அக்கைகள், இருநிலம் - பூமியில், சேர்ந்த - விழுந்து கிடக்கும், குடை கீழ் - குடைகளின் அருகே (கிடந்த காட்சி), கோடுகொள் - கலைநிறைந்த, ஒள் மதியை - ஒளிபொருந்திய சந்திரனை, நக்கும் பாம்பு - தீண்டுகின்ற பாம்பினை, ஒக்கும் - ஒத்திருக் கும்.

**க-ரை:** போரில் துண்டிக்கப்பட்ட துதிக்கைகள், வெண் குடைக்கு அருகில் கிடப்பது, சந்திரனைப் பாம்பு தீண்டு கின்ற செயல்போல் இருந்தது.

பாடு - ஒலி. ஆடு - அசைதல். கோடு - பக்கம், ஈண் டுக் கலையை உணர்த்திற்று. நக்கும் - தீண்டும். குடைக் கீழ் - 'கிடப்பன' எனும் ஒரு சொல் வருவிக்க. துணிந்தவை துணிந்த + அவை — அகரம் தொக்கது. குடைகள் - அரசர் கள் விட்டுப்போன வெண்சக்கரக் குடைகளைக் குறித்தது.

### செவ்வானக் கருமுகில்

நெற்றி பிளந்து, இரத்தம் ஒழுக, நிமிர்ந்து நிற்கும் யானையின் காட்சி, செக்கர் வானத்தில் கருமுகில்போல் காணும்.

*எற்றி வயவர் எறிய, நுதல்பிளந்து,*
*நெய்த்தோர்ப் புனலுள் நிவந்தகளிற்(று) உடம்பு,*
*செக்கர்கொள் வானில் கருங்கொண்மூப் போன்றவே;*
*கொற்றவேல் தானைக் கொடுத்திண்தேர்ச் செம்பியன்*
*செற்றாரை அட்ட களத்து,* 23

**ப-ரை:** கொற்றம் - வெற்றி பொருந்திய, வேல்தானை - வேலையுடைய சேனையையும், கொடி திண் தேர் - கொடியை யுடைய வலிய தேரையும் கொண்ட, செம்பியன் - சோழன், செற்றாரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, வயவர் - வீரர்கள், எற்றி எறிய - (படை களை) வீசி எறிய, நுதல் - நெற்றி, பிளந்து - பிளத்தலால், நெய்த்தோர் புனலுள் - இரத்த நீருள், நிவந்த - (மூழ்கி) எழுந்த, களிறு உடம்பு - யானைகளின் உடம்புகள், செக்கர் கொள் - சிவந்தநிறங்கொண்ட, வானில் - வானத்தில், கரும் கொண்மூ - கரிய மேகத்தை. போன்ற - ஒத்தன.

**க-ரை:** போரில் யானைகள் நெற்றி பிளந்து இரத்தம் ஒழுகும் காட்சி, அந்திவானத்திடைத் தோன்றும் கருமுகிலை ஒத்திருந்தன.

பிளந்து - பிளத்தல் என்பது திரிந்து நின்றது. நெய்த்தோர்; குருதி. செக்கர் - சிவப்பு நிறம். தேரின்மீது கொடி அமைத்தல் மரபு என்பதை, 'கொடித் திண்தேர்'-குறிக்கிறது.

**பனங்காய்ப் பைந்தலை**

வீரர் வெட்டி வீழ்த்திய தலைகள், விதம் விதமாய்க் கிடக்கும் காட்சி, காற்றுப் புகுந்து கலக்கிடப் பனங்காய்கள் பக்கமெலாம் உருண்டு கிடப்பதை ஒத்தன.

*திண்தோள் மறவர் எறியத், திசைதோறும்*
*பைந்தலை பாரில் புரள்பவை;—நன்(கு)எனைத்தும்*
*பெண்ணை அம் தோட்டம் பெருவளி புக்(கு)அற்றே;*
*கண்ணார் கமழ்தெரியல் காவிரி நீர்நாடன்*
*நண்ணுரை [1] அட்ட களத்து.* 24

**ப-ரை:** கண்ணார் - அழகு நிறைந்த, கமழ் தெரியல் - மணம் வீசுகின்ற மாலையை அணிந்த, காவிரி நீர் நாடன் - காவிரி நீர் பாயும் நாட்டையுடைய சோழன், நண்ணுரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, திண்தோள் - வலிய தோள்களையுடைய, மறவர் - வீரர்கள், திசைதோறும் - எல்லாத் திசைகளிடத்தும், எறிய - (வாளை) வீசுதலால், பாரில் - பூமியில், பைந்தலை - (வெட்டி வீழும்) புதிய தலைகள், புரள்பவை - புரள்வன, பெருவளி - பெருங் காற்றானது, பெண்ணை தோட்டம்-பனந்தோப்பு, நன்கு எனைத்தும் - முழுவதும், புக்கது - அடைந்த செயலை (காய்கள் யாவும் உதிர்ந்து கிடப்பதை), அற்று - ஒத்தன.

**க-ரை:** போரில் வீரர்களால் வெட்டப்பட்ட தலைகள் உருண்டுகிடக்கும் காட்சி, பெருங்காற்று பனந்தோப்பில் புகுந்து காய்கள் உதிர்ந்து கிடப்பதை ஒத்தன.

பைந்தலை - பசுமை + தலை - ஈண்டு பசுமை கருமையைக் குறித்தது; புதியதை உணர்த்திற்றுமாம். தோட்டம் - தோப்பு, சோலை முதலியன. பெரு வளி - புயற்காற்று; சூறுவளி.

---

பிற பாடம்: 1. எண்ணுரை; ஒன்னுரை.

**மலை கலங்கப் பாயுமலை**

மலையொடு மலை பாய்வதைப் போல யானையொடு யானை பொருதும்போது யானைகளின் மேல் கட்டி யுள்ள அழகிய கொடிகள் வானத்தைத் துடைப்பதுபோல் காட்சி நல்கும்.

***மலைகலங்கப் பாயும் மலைபோல் நிலைகொள்ளாக்***
***குஞ்சரம் பாயக், கொடிஎழுந்து—பொங்குபு,***
***வானம் துடைப்பன போன்ற; புனல்நாடன்***
***மேவாரை அட்ட களத்து.*** 25

**ப-ரை:** புனல் நாடன் - நீர்வளப்பம் நிறைந்த நாட்டை யுடைய சோழன், மேவாரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து – போர்க்களத்திடத்து, மலை - மலைகள், கலங்க - நடுங்க, பாயும் - பாய்கின்ற, மலைபோல் - மலைகளைப்போல. நிலை கொள்ளா - நிலைகொண்டு, குஞ்சரம் பாய - யானைகள் பாய்தலால், கொடி – (அவற்றின்மீது கட்டப்பட்ட) கொடிகள், எழுந்து - நிமிர்ந்த செயல், பொங்குபு - விளங்குகின்ற, வானம் - வானத்தை, துடைப்பன - துடைப்பனவற்றை, போன்ற - ஒத்தன.

**க-ரை:** போரில் மலையொடு மலை பொருதல் போல் யானையொடு யானை பாயவும், அவற்றின்மீதுள்ள கொடிகள் வானத்தை மாறி மாறித் துடைப்பதையும் ஒத்தனவாம்.

'மலைகலங்கப் பாயும் மலைபோல்'- இல்பொருள் உவமை. பொங்குபு - செய்பு எனும் வாய்பாட்டு வினையெச்சம்.

**செஞ்செவிப் புன் சேவல்**

வீரர் துணித்திட்ட கைகளைத் தூக்கிச் செல்லும் பருந்துகள் அழகிய நாகத்தை ஆவலுடன் உண்ணத் தூக்கிச் செல்லும் கருடனை ஒக்கும்.

***எவ்வாயும் ஓடி வயவர் துணித்திட்ட,***
***கைவாயில் கொண்டெழுந்த செஞ்செவிப் புன்சேவல்,***
***ஐவாய் விடநாகம் [1] கவ்வி விசும்(பு)இவரும்***
***செவ்வாய் உவணத்தில் தோன்றும்; புனல்நாடன்***
***தெவ்வரை அட்ட களத்து.*** 26

**ப-ரை:** புனல்நாடன் - நீர் வளப்பம் நிறைந்த நாட்டை யுடைய சோழன், தெவ்வரை - பகைவரை, அட்ட -

---

பிற பாடம்: 1. வயநாகம்.

கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, எ வாயும் ஓடி - எவ்விடத்தும் சென்று, வயவர் - வீரர்கள், துணித்திட்ட - துணித்த, கை - கைகளை, வாயில் - (தமது) வாயில் கொண்டு, எழுந்த - கௌவிக்கொண்டு மேல் எழுந்த, செம் செவி-சிவந்த செவிகளையுடைய, புல் - மங்கிய நிறமுள்ள, சேவல் - ஆண் பருந்துகள், ஐவாப் - அழகிய படத்தையும், விட நாகம் - விடத்தையுமுடைய நாகப்பாம்பை, கவ்வி - கவ்விக்கொண்டு, விசும்பு - வானில், இவரும் - செல்லும், செவ்வாய் - சிவந்த வாயையுடைய, உவணத்தில் - கருடனைப்போல, தோன்றும் - காட்சியளிக்கும்.

**க-ரை:** வீரர் வெட்டிய கைகளைப் பருந்துகள் தூக்கிச் செல்லும் காட்சி, பாம்புகளைக் கருடன் கவ்விக்கொண்டு பறப்பதை ஒக்குமாம்.

புன்மை - மங்கிய தன்மை. ஐ - அழகு; ஐந்து. கை - முதலாகு பெயராக விரல்களைக் குறித்தன. ஐவிரல்களைக் கொண்ட கையை ஐவாய்களையுடைய நாகத்திற்கு உவமை கூறியும் உரைப்பர். உவணத்தில் - 'இல்' ஐந்தனுருபு ஒப்புப்பொருள்.

**பூநீர் மிடா**

இரத்தச் சேற்றை யானை சீறி மிதித்தலால், அதன் கால் பதிந்த இடமெல்லாம் பள்ளமாக, அப் பள்ளத்திடை இரத்தம் நிரம்பித் தோற்றுவது, செம்பூக்கள் பூத்த மிடாவை ஒத்திருக்கும்.

***செஞ்சேற்றுள் செல்யானை சீறி மிதித்தலால்,***
***ஒண்செங் குருதிகள் தொக்(கு)ஈண்டி நின்றவை,***
***பூநீர் வியன்றமிடாப் போன்ற; புனல்நாடன்***
***மேவாரை அட்ட களத்து.*** 27

**ப-ரை:** புனல் நாடன்-நீர்வளம் நிறைந்த நாட்டையுடைய் சோழன், மேவாரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, செம் சேறு உள் - இரத்தமாகிய சேற்றில், செல்யானை - செல்கின்ற யானைகள், சீறி - வெகுண்டு, மிதித்தலால் - மிதித்தலினால் (உண்டான குழிந்த இடங்களில்), ஒண் செம் குருதிகள் - ஒள்ளிய சிவந்த இரத்தமானது, தொக்கு ஈண்டி நின்றவை - ஒன்று சேர்ந்து நின்ற காட்சிகள், பூநீர் - செம்பூக்களைக் கொண்ட நீரினையுடைய, வியன்ற மிடா - அகன்ற சால்களை, போன்ற - ஒத்தன.

**க-ரை:** போரிடம் யானைகள் இரத்தத்தில் மிதித்த அடிச்சுவட்டில் உண்டான பள்ளங்களில் தேங்கிய இரத்த மானது, செம்பூக்களைக் கொண்ட சால்கள்போல் இருந்தன.

செல்யானை - வினைத் தொகை. தொக்கு ஈண்டி - ஒரு பொருட் பன்மொழி. யானை மிதித்தலால் உண்டான பள் ளங்களில் நீர் தங்குதலை, 'ஆர்களிறு மிதித்த நீர்திகழ் சிலம் பில்' (குறுந்தொகை - 52) என்பதால் அறிக.

**கண்ணாடி காண்பார்**

கேடகத்தோடு கைவெட்டுண்டு கிடக்க, அதை நரி கௌவி நிற்கும் காட்சி, கண்ணாடி பார்ப்பவரை ஒக்கும்.

*ஓடா மறவர் உருத்து மதம்செருக்கிப்,*
*பீடுடை வாளார் பிறங்கிய ஞாட்பினுள்,*
***கேடகத்தோ(டு) அற்ற தடக்கை, கொண்(டு)ஓடி***
***இகலன்வாய்த் துற்றிய தோற்றம், அயலார்க்குக்***
***கண்ணாடி காண்பாரின் தோன்றும்; புனல்நாடன்***
*நண்ணாரை அட்ட களத்து.* 28

**ப-ரை:** புனல் நாடன் - நீர்வளம் நிறைந்த நாட்டினை யுடைய சோழன், நண்ணாரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, ஓடா மறவர் - புறம் கொடாத வீரர்கள், உருத்து - கோபித்து, மதம் செருக்கி - களிப்பு மிகுந்து, பீடு உடை - பெருமையுடைய, வாளார் - வாளை யுடையராய், பிறங்கிய - விளங்கிய, ஞாட்பினுள் - போரி னுள், கேடகத்தோடு அற்ற - கேடகத்தோடு அறுபட்ட, தடகை - நீண்ட கைகளை, இகலன் - நரிகள், வாய் துற்றிய கொண்டு - வாயிற் கௌவிக்கொண்டு, ஓடி - சென்ற, தோற் றம் - காட்சி, அயலார்க்கு - அயலில் நின்றார்க்கு, கண்ணாடி காண்பார் இல் - கண்ணாடி பார்ப்பவரைப் போல, தோன்றும் - காட்சியளிக்கும்.

*க-ரை:* கேடகத்தோடு அறுபட்ட கைககளை நரிகள் கௌவிச் செல்லும் காட்சி, அயலில் நின்றார்க்குக் கண்ணாடி யைப் பார்ப்பவர்போல் தோன்றுமாம்.

பிறங்குதல் - போராற்றும் நிலை. தட கை - உரிச்சொல் தொடர். துற்று - கவ்வுதல். கண்ணாடி கேடயமும், கை கண்ணாடி நிற்க உதவும் மரத் துண்டாகவும், கையைக்

ளெவும் நரி கண்ணுடி பார்ப்பவரையும் உவமையாகக கூறியுள்ளார்.

**ஓடும் மயில்கள்**

காற்று மிக வீச அதைப் பொறுக்காத மயில்கள், அஞ்சி, இன்னது செய்தல் என்பதை அறியாது, எப்பக்கமும் அக விக்கொண்டு ஓடல்போல் நாற்றிசையும் இறந்த தம்தம் கணவர்க்கிரங்கி, மனைவிமார்கள் அலறுவர்.

*கடிகாவில் காற்(று)உற்(று) எறிய, வெடிபட்டு*
*வீற்றுவீ(ற்)று ஓடும் மயிலினம்போல்; — நாற்றிசையும்*
*கேளிர் இழந்தார் அலறுப; செங்கண்*
*சினமால் அட்ட களத்து.* 29

**ப-ரை:** சினம் - கோபத்தையுடைய, செங்கண்மால் - செங்கட் சோழன், பொருத - போர் செய்த, களத்து - களத் திடத்து, கடிகாவில் - மரங்கள் மிகுந்த சோலையில். காற்று - காற்ருனது, உறு எறிய - மிக வீசுதலால், வெடிபட்டு - அஞ்சி, வீற்று வீற்று ஓடும் - வேறு வேருக ஓடும், மயில் இனம் போல் - மயிற்கூட்டம் போல; நால் திசையும் - நான்கு திசைகளிலும், கேளிர் - கொழுநரை, இழந்தார் - இழந்த மக ளிர், அலறுப - கதறி நிற்பர்.

**க-ரை:** பெருங்காற்று வீச, ஆற்ருத மயில்கள் அகவி எப்பக்கமும் ஓடும் காட்சி போல போரிடத்துக் கணவரை இழந்த மகளிர் நாலா பக்கமும் அலறுவராம்.

வீறு - வேறு. கேளிர் - உற்ருர்; ஈண்டு கணவரைக் குறித்தது. அலறுப - பலர்பால் வினை முற்று. வெடிபடு தல் - அஞ்சுதல்.

**மலை மடக்கும் நீர்**

மழை நீர் மலைகளை மடக்கியும், தேக்கியும், உருட்டியும் வரல்போல் இரத்த வெள்ளம் யானைகளை இழுத்துச்செல்லும்.

*மடங்க எறிந்து மலையுருட்டு நீர்போல்,*
*தடங்கொண்ட ஒண்குருதி கொல்களி(று) ஈர்க்கும்;*
*மடங்கா மறமொய்ம்பின் செங்கண் சினமால்*
*அடங்காரை அட்ட களத்து.* 30

*ப-ரை:* மடங்கா - மடங்குதல் இல்லாத, மறம் - வீரமும், மொய்ம்பு இன் - வலிமையும், சினம் - கோபத்தையுமுடைய செங்கண்மால் - செங்கட் சோழன், அடங்காரை - பகைவரை அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, மலை - மலைகளை, மடங்க - மறிப்பவும், எறிந்து - வீசியும், உருட் டும் நீர்போல்-உருட்டியும் வரும் நீரைப்போல, தடம் கொண்ட - பரந்த, ஒள் குருதி - ஒள்ளிய இரத்தவெள்ளம், கொல்களிறு- கொல்லப்பட்ட யானைகளை, ஈர்க்கும் - இழுத்துச் செல்லும்.

*க-ரை:* மலைகளை உருட்டி அடித்துக் கொண்டு செல் லும் நீர்போல யானைகளை இரத்த வெள்ளம் இழுத்துச் செல்லும்.

கொல் களிறு - வினைத்தொகை. மடங்கல், எறிதல், உருட்டல் முதலிய செய்கைகள் நீரின் செயல்களாகும்.

### மின்னற்கொடி

போரிடை நெற்றி பிளந்து நிலத்திடை வீழும் யானை யின் நெற்றியில் அணிந்துள்ள பட்டம் தெறித்து வீழ்வது மின்னல் கொடிபோல் காட்சிநல்கும்.

***ஓடா மறவர் எறிய, நுதல்பிளந்து,***
***கோ(டு)ஏந்து கொல்களிற்றுக் கும்பத்(து) எழிலோ***
***மின்னுக் கொடியின் மிளிரும் புனல்நாடன் [டை***
***ஒன்னாரை அட்ட களத்து. 31***

*ப-ரை:* புனல் நாடன் - நீர் வளப்பம் நிறைந்த நாட்டை யுடைய சோழன், ஒன்னாரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, ஓடா மறவர் - புறங்கொடாத வீரர்கள், எறிய - (வேலை) வீசுதலால், நுதல் பிளந்து - நெற்றி பிளக்கப்பட்டு, கோடு ஏந்து - கொம்பினை ஏந்திய, கொல்களிறு-கொல்லப்பட்ட யானையின், கும்பத்து-மத்தகத்தில் கட்டப்பட்டுள்ள, எழில் ஓடை - அழகிய பட்டம் (தெறித்துவீழ் வது), மின் கொடி இல் - மின்னற்கொடிபோல், மிளிரும் - விளங்கும்.

*க-ரை:* வீரர் வீசிய வேலால், நெற்றி பிளந்து, கொம் பொடு திரியும் யானையின் மத்தகத்தில் கட்டியுள்ள ஓடை எனும் பட்டங்கள் வீழ்வது மின்னல் கொடிபோல ஒளி விடும்.

ஓடை - பட்டம்; இதனை நெற்றிப்பட்டம் என்பர். மின்னுக்கொடி - 'மண்ணு மங்கலம்' என்பதுபோல உகரச் சாரியை பெற்றது. ஓடா மறவர் - மறவரின் வீரத்தைக் குறித்தது.

**செம்போர்வை**

நிலமகள் இரத்தத்தில் தோய்ந்து, செந்நிறம் பெற்ற காட்சி. செந்நிறப் போர்வையை அவள் போர்த்தியதைப் போன்றது.

***மையில்மா மேனி நிலமென்னும் நல்லவள்,***
***செய்யது போர்த்தாள்போல் செவ்வந்தாள்; —பொய்***
***பூந்தார் முரசின் பொருபுனல் நீர்நாடன் [தீர்ந்த***
***காய்ந்தாரை அட்ட களத்து. 32***

**ப-ரை:** பொய்தீர்ந்த - குற்றமில்லாத (மணமிகுந்த), பூ தார் - பூமாலை அணிந்த, முரசின் - வெற்றி முரசத்தையும், பொரு - அலை (கரையோடு) மோதும், புனல் - நீர் நிறைந்த, நீர் நாடன் - காவிரிநாட்டையுமுடைய சோழன், காய்ந்தாரை - வெகுண்ட பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, மை இல் - குற்றமற்ற, மாமேனி - அழகிய உடலையுடைய, நிலம் என்னும் நல்லவள் - பூமி எனும் மாது (நிலமகள்), செய்யது - (கொல்லப்பட்ட வீரர்களின் இரத்தம் பரவிய) சிவந்த நிறமுள்ள போர்வையை, போர்த்தாள் போல் - போர்த்தவளைப்போல, செவ்வந்தாள் - சிவந்த நிறத்தையடைந்தாள்.

**க-ரை:** போரில் வீரர்களின் இரத்தம் எங்கும் பரவியுள்ள காட்சி, நிலமகள் இரத்தப் போர்வை போர்த்ததை ஒத்திருக்கும்.

நிலமென்னும் நல்லவள்: 'நிலமெனும் நல்லாள் நகும்' (குறள் - 1040) ஆல் அறிக. நிலத்தை மகளாகக் கூறல் தமிழ் மரபு. செவ்வந்தாள் - செவ்வரல் பகுதி. பொய்தீர்ந்த - குற்றமிலாத. 'பூந்தார் முரசு' என்பதால் முரசுக்கு மாலை சூட்டலைக் காட்டிற்று.

**வாளை பிறழும் வனப்பு**

போரில் வீரர்களின் வேலில் இருந்து வெளிவரும் ஒளி, வெள்ளத்தில் தோன்றும் நெய்தற்பூக்களுக்கு இடையே வாளைமீன் பிறழும் வனப்பைப் போன்றது.

*பொய்கை யுடைந்து, புனல்பாய்ந்த வாயெல்லாம்*
*நெய்தல் இடையிடை வாளை பிறழ்வனபோல்;*
*ஐ(து)இலங்(கு) எஃகின் அவிரொளிவாள் தாயினவே;*
*கொய்சுவல் மாவின் கொடித்திண்தேர்ச் செம்பியன்*
*தெவ்வரை அட்ட களத்து.* 33

**ப-ரை:** கொய் - ஒத்தளவில் கத்தரிக்கப்பட்ட, சுவல் - கழுத்து மயிரையுடைய, மா இன் - குதிரையினையும், கொடி - கொடி கட்டிய, திண் - வலிய, தேர் - தேரினையுமுடைய, செம்பியன் - சோழன், தெவ்வரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, பொய்கை - பொய்கையினது, உடைந்து - கரை உடைத்தலால், புனல் - பாய்ந்த - (அதனிடமுள்ள) நீர் வெளிப்பட்டுப் பரந்த, வாய் எல்லாம் - இடமெல்லாம், நெய்தல் - நெய்தல் பூக்களின், இடை இடை - நடு நடுவே, வாளை - வாளைமீன்கள், பிறழ் வன போல் - பிறழ்தல் போல, ஐது - அழகுடையதாய், இலங்கு - விளங்குகின்ற, எஃகின் - வேலொடு, அவிர் ஒளி - விளங்கும் ஒளியையுடைய, வாள் - வாட்கள், தாயின - எதிர்ந் தன.

**க-ரை:** பொய்கைக் கரை உடைந்து, வெளிவந்த நீர் பரந்துநிற்க, அதற்கிடையில் உள்ள நெய்தற் பூக்களுக்கு யிடையிடை வாளை பிறழ்தல்போல் வீரர்களின் வேல்கள் ஒளிவிட்டு விளங்கும்.

பொய்கை - இயல்பாக உண்டாகும் குளம் முதலியன. இலங்கு எஃகு, அவிர் ஒளி, கொய்சுவல்-வினைத்தொகைகள். தாயின - தாவின; தாவு + இன் + அ - வகரம் யகரமாய்த் திரிந்தது. நெய்தல் - ஆகுபெயர்; இப் பூ வெண்ணிறமுடை யது.

### குடர் இழுக்கும் குறுநரி

வீரர் வயிற்றில் வேல் பாய, குடர் சரிய, அக் குடரைக் குள்ளநரி இழுக்கும் காட்சி, தூணில் சங்கிலியால் கட்டுண்ட வேட்டை நாயை ஒக்கும்.

*இணரிய ஞாட்பினுள் ஏற்(று)எழுந்த மைந்தர்,*
*சுடர்இலங்(கு) எஃகம் எறியச்சோர்ந்(து) உக்க,*
*குடர்கொண்டு வாங்கும் குறுநரி கந்தில்*
*தொடரொடு கோணாய் புரையும்; அடர்பைம்பூண்*
*சேய்பொரு(து) அட்ட களத்து.* 34

**ப-ரை:** அடர் - நெருங்கிய, பைம்பூண் - பொன் அணிகளை மார்பில் அணிந்த, சேய் - சோழன், பொருது - போர் செய்து, அட்ட - கொன்ற, களத்து - களத்திடத்து, இணரிய - நெருங்கிய, ஞாட்பினுள் - போரில், ஏற்று எழுந்த - எதிர்த்து எழுந்த, மைந்தர் - வீரர்கள், சுடர் இலங்கு - ஒளி விளங்குகின்ற, எஃகம் - வேல்களை, எறிய - வீசுதலால், சோர்ந்து - சரிந்து, உக்க - சிந்திய, குடர் கொண்டு - குடலைக் கவ்விக் கொண்டு, வாங்கும் - இழுக்கும், குறுநரி - குள்ள நரிகள், கந்து இல் - தூணிலே, தொடரொடு - சங்கிலியோடு (கட்டப்பட்டுள்ள), கோணாய் - வேட்டை நாய்களை, புரையும் - ஒக்கும்.

**க-ரை:** வீரர்கள் குடல்சரிந்து கிடக்க, அதை உண்ண இழுக்கும் குறுநரிகளின் செயல்கள், சங்கிலியால் தூணில் கட்டுண்டு கிடக்கும் வேட்டை நாய்களை ஒக்கும்.

இணர் - நெருங்கியும் விட்டும் சேர்ந்தும் விளங்கும் கொத்துப் பூக்களைக் குறிக்கும். இவ்வுவமை போரிற்கு ஏற்றது. இணரிய - இணர் + இன் + அ - இடைநிலை னகரம் கெட்டுப் புணர்ந்தது. கோணாய் - வேட்டைநாய். 'தொடர்படு ஞமலி' (புறம் - 74) என்பதில் தொடர் - சங்கிலியாதல் அறிக.

***சிங்கமும் மலையும்***

அரசரோடு யானைகள் அழிந்தொழிந்த காட்சி, சிங்கம் சுமந்த மலை, இடி வீழ, சிங்கமும் மலையும் சிதறுண்ட செயல் போலாகும்.

***செவ்வரைச் சென்னி அரிமானோ(டு) அவ்வரை***
***ஒல்கி உருமிற்(கு) உடைந்தற்றால்;[1]—மல்கிக்***
***கரைகொன்(று) இழிதரூஉம்[2] காவிரி நாடன்***
***உரைசால் உடம்பிடி மூழ்க அரசோ(டு)***
***அரசுவா வீழ்ந்த களத்து.*** 35

**ப-ரை:** மல்கி - நீர் மிகுந்து, கரை - கரைகளை. கொன்று - அழித்து, இழிதரும் - செல்லும், காவிரி நாடன் - காவிரி நாட்டையுடைய சோழன், உரைசால் - புகழமைந்த, உடம்பிடி - வேல்கள், மூழ்க - உட்பாய்தலால், அரசோடு - அரசரோடு, அரசுவா - (பட்டத்து) யானைகள், வீழ்ந்த களத்து - வீழ்த்தப்பட்ட போர்க்களத்திடத்தில், செவ்வரை - செவ்விய மலைகள், சென்னி - உச்சியில் உள்ள, அரிமானோடு - சிங்கத்

---

பிற பாடம்: 1. உடைந்தன்றால், குடைந்தன்று. 2. இழிதரும்.

துடன், அ வரை - அந்த மலையும், ஒல்கி - தளர்ந்து, உரு மிற்கு - இடிக்கு, உடைந்தற்று - அழிந்தாற்போலும்.

**க-ரை:** போரில் அரசரோடு பட்டத்து யானைகள் வீழ்ந்து கிடந்த காட்சி, சிங்கத்தோடு மலைகள் இடியால் சிதறுண்டு கிடப்பதை ஒத்தனவாம்.

அரசுவா : அரசு+உவா: பட்டத்து யானை. பல போரில் வெற்றியுற்று பட்டம் பெற்ற யானை எனினும் அமையும். உடைந்து - உடைந்தால் என்பது திரிந்துநின் றது. உடம்பிடி - வேல். அரசர் சிங்கத்திற்கும், யானைகள் மலைக்கும், போர்க் கருவிகள் இடிக்கும் உவமைகளாக வந் துள்ளன.

**காளானின் காட்சி**

போரில் குதிரைகள் உதைப்ப, குடைகள் சாய்ந்திருக் கும் காட்சி, ஆ இடறக் கிடக்கும் அருங்காளானை ஒத்திருக் கும்.

***ஓஓ உவமன் உறழ்வின்றி ஒத்ததே***
***காவிரி நாடன் கழுமலம் கொண்டநாள்***
***மாஉதைப்ப, மாற்றார் குடையெல்லாம் கீழ்மேலாய்,***
***ஆஉதை காளாம்பி போன்ற;[1] புனல்நாடன்***
***மேவாரை அட்ட களத்து.*** *36*

**க-ரை:** காவிரி நாடன் - காவிரிபாயும் நாட்டையுடைய சோழன், கழுமலம் கொண்ட நாள் - கழுமலம் என்னும் ஊரி னைக் கைக்கொண்ட நாளில், புனல் நாடன் - அச் சோழன், மேவாரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க் களத்தின்கண், மா உதைப்ப - குதிரைகள் உதைத்தலால், மாற்றார் - பகைவரின், குடையெல்லாம் - குடைகளெல்லாம், கீழ் மேலாய் - கீழ்மேலாகிய நிலை, ஆ உதைப்ப - பசுக்கள் இடறலால், காளாம்பி - காளான்கள் (கிடக்கும் காட்சியை), போன்ற - ஒத்தன; உவமன்-அவ் உவமை, உறழ்வு இன்று- மாறுபாடில்லாமல், ஒத்தன - பொருந்தியனவாம்.

**க-ரை:** போரில் குதிரைகள் குடைகளை உதைத்தலால் அவை கீழ் மேலாய்க் கிடக்கும் காட்சி, பசுக்கள் காளான் களை இடறலால் அவை கிடப்பதை ஒத்திருந்தனவாம்.

---

பிற பாடம்: 1. ஆவுதைக்கும் ஆம்பி நிகர்த்த, ஆவுதைத் தாரம்பி போன்ற.

ஓஓ - இடைச்சொல்; சிறப்புப்பற்றி வந்தது. கழுமலம் - சேரநாட்டின்கண் உள்ள ஓர் ஊர். உவமன் என்பதற்கு முன் சுட்டு வருவித்துரைக்க. காளாம்பி - காளான்; நாய்க் குடை என்பர். உதை - எற்ற, இடற.

**அலை இழுக்கும் தோணி**

பிணங்கள் கக்கிய இரத்தம் முரசோடு யானையை முன் இழுத்துச் செல்லல், கடல் அலைகள் தோணியை இழுத்தலை ஒக்கும்.

> ***அரசர் பிணம்கான்ற நெய்த்தோர், முரசொடு***
> ***முத்துடைக் கோட்ட களி(று)ஈர்ப்ப;—எத்திசையும்***
> ***பௌவம் புணர்அம்பி போன்ற புனல்நாடன்***
> ***தெவ்வரை அட்ட களத்து.*** **37**

**ப-ரை:** புனல் நாடன் - நீர் வளப்பம் நிறைந்த நாட்டையுடைய சோழன், தெவ்வரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்தின்கண், அரசர் - அரசர்களின், பிணங்கள் - பிணங்களானது, கான்ற - சிந்திய, நெய்த்தோர் - இரத்தம், எ திசையும் - எல்லாத் திசைகளிலும், முரசொடு - முரசங்களுடன், முத்துஉடை - முத்தைக்கொண்ட, கோட்ட - கொம்புகளையுடைய, களிறு - யானைகளை, ஈர்ப்ப - இழுப்பதானது, பௌவம் - கடலலைகளில், புணர் - இயைந்த, அம்பி - தோணிகளை, போன்ற - ஒத்தன.

**க-ரை:** போரில் பரந்துகிடக்கும் இரத்த வெள்ளம், முரசோடு யானைகளை இழுப்பதானது, கடலலைகள் தோணிகளை இழுப்பதை ஒத்தனவாம்.

கோட்ட : கோடு + அ ; குறிப்புப் பெயரெச்சம். அம்பி- தோணி. பௌவம் - அலை - முதலாகுபெயர். சிறிய பெரிய தோணிகளைப் பொதுவாகத் தோணி என்று குறிப்பிட்டார். முரசு சிறு தோணிக்கும், யானை பெரிய தோணிக்கும் உவமையாக வந்ததை அறிக.

**புண்பட்ட யானை**

வேல் பாய, புண்ணுக, புண்ணின் வலி ஆற்று யானை புரளும் காட்சி, இடியொலியால் புரளும் பாம்பை ஒக்கும்.

***பருமப் பணைஎருத்தின் பல்யானை புண்கூர்ந்(து).***
***உரும்எறி பாம்பின் புரளும்;—செருமொய்ம்பின்***
***பொன்ஆரம் மார்பின் புனைகழற்கால் செம்பியன்***
***துன்னாரை அட்ட களத்து.*** 38

**ப-ரை:** செரு - போர், மொய்ம்பு இன் - வலியினையும், பொன் ஆரம் — பொன்னாலாகிய மாலைகளை அணிந்த, மார்பின் - மார்பினையும், புனை - கட்டிய, கழல்கால் - வீரக் கழல் விளங்கும் காலினையுமுடைய, செம்பியன் - சோழன், துன்னாரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க் களத்தின்கண், பருமம் - அலங்கரிக்கப்பட்ட, பணை - பருத்த, எருத்தின் - பிடரினையுமுடைய, பல் யானை - பல யானைகள், புண் கூர்ந்து - (படைகளால்) புண் மிகுதலால், உரும் - இடியொலியால், எறி - வீசி எறியப்பட்ட, பாம்பு இன் - பாம்பு போல, புரளும் - உருளும்.

**க-ரை:** போரில் யானைகள் புண்ணுற்றுப் புரளுவது, இடியால் எறியப்பட்ட பாம்பை ஒக்குமாம்.

பருமம் - அலங்கரித்தல். பாம்பின் - இன் ஐந்தனுருபு ஒப்புப் பொருள். கூர்ந்து - கூர் எனும் உரிச்சொல் அடியாகப் பிறந்த வினை யெச்சம்.

### வெண்குடையும் செங்குடையும்

போரிடைக் காம்பு முறிந்த வெண்குடைகள், இரத்தத்தில் தோய்ந்து செங்குடையாய்த் தோற்றிய காட்சி, செம்பஞ்சுக் குழம்பிருந்த வட்டிலை ஒத்தன.

***மைந்துகால் யாத்து மயங்கிய ஞாட்பினுள்,***
***புய்ந்துகால் போகிப் புலால்முகந்த வெண்குடை,***
***பஞ்சிபெய் தாலமே போன்ற; புனல்நாடன்***
***வஞ்சிக்கோ அட்ட களத்து.*** 39

**ப-ரை:** புனல் நாடன் - நீர் நிரம்பிய வளம் நிறைந்த நாட்டையுடைய சோழன், வஞ்சி கோ - வஞ்சிநாட்டரசனை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்தின் கண், மைந்து - வலிமையுடைய வீரர்களின், கால் - கால்களை, யாத்து - தளை செய்தலால், மயங்கிய - கலங்கிய, ஞாட்பினுள் - போரின் கண், வெண்குடை - வெண்கொற்றக்குடைகள், கால் - காம்பு, புய்ந்துபோகி - பறித்துபோகப்பட்டு, புலால் முகந்த - (இரத்தம் தோய்ந்த) தசைகளை முகந்து கிடந்த காட்சி, பஞ்சி

பெய் - செம்பஞ்சுக்கழம்பு பொழியப்பட்ட, தாலமே - உண்கல வட்டிலே, போன்ற - ஒத்தன.

**க-ரை:** போரில் காம்பற்ற வெண்குடைகள் இரத்தத்தில் தோய்ந்து கிடந்த நிலை, செம்பஞ்சுக்குழம்பு பெய்யப்பட்ட வட்டிலை ஒத்தனவாம்.

யாத்து - கட்டுதல்; ஈண்டு விலங்கிடலை உணர்த்திற்று. புய்ந்து - பறித்து; புய் பகுதி. தாலம் - உண்கலம்; வட்டில். வஞ்சி - சேரரின் தலைநகர். பஞ்சி - செம்பஞ்சுக்குழம்பு.

**வெள்ளி உழு படை**

அம்புகள் மழைபோல் பொழிய, களிறுகள் நிலத்திடைக் கொம்புகளைக் குத்திக்கொண்டு வீழ்ந்து கிடக்கும் காட்சி, வெள்ளி உழுபடையால் பூமியை உழுவதை நிகர்த்தது.

***வெள்ளிவெண் நாஞ்சிலால் ஞாலம் உழுவனபோல்,***
***எல்லாக் களிறு நிலம்சேர்ந்த; — பல்வேல்***
***பணைமுழங்கு போர்த்தானைச் செங்கண் சினமால்***
***கணைமாரி பெய்த களத்து.*** 40

**ப-ரை:** பல் வேல் - பல வேல்ஒலியொடு, பணை முழங்கு - முரசு முழங்குகின்ற, போர் தானை - போர்ப்படையையும், சினம் - கோபத்தையும் உடைய, செங்கண்மால் - செங்கட் சோழன், கணைமாரி - அம்பாகிய மழையை, பெய்த களத்து - பொழிந்த போர்க்களத்தின்கண், களிறு எல்லாம் - யானைகள் எல்லாம், நிலம் சேர்ந்த - (முகங்கவிழ்ந்து) நிலத்தை அடைந்திருந்த காட்சியானது, வெள்ளி - வெள்ளியால் செய்யப்பட்ட, வெள் நாஞ்சிலால் - வெந்நிறக் கலப்பையால், ஞாலம் உழுவனபோல் - நிலத்தை உழுதல் போலாயின.

**க-ரை:** போரில் யானைகள் முகங் கவிழ்ந்து கொம்பு நிலத்தில் பதிந்து கிடப்பன, வெள்ளி உழுபடையால் நிலத்தை உழுவதை ஒத்ததாம்.

நாஞ்சில் - உழுபடை. யானையின் வெண்ணிறக் கொம்புகளை வெள்ளி உழுபடைக்கு உவமையாக்கப்பட்டுள்ளது. மழை பெய்த பின் நிலம் உழுதலைப் போல போருக்குப் பின் யானையின் செயலைக் குறித்தது அறிதற்பாலது. களிறு எல்லாம் - ஒருமைப் பன்மை மயக்கம். பணை - முரசு. தொடர்ந்து அம்பு செல்லலைக் 'கணைமாரி' என்றார்.

**மறை கேட்கும் யானை**

யானையின் உடலில் வேல் பாய, வீரர்கள் மேலேறிக் குத்த, கால் தள்ளாடி, செவி சாய்ந்து நிலத்திடை வீழ்ந் திட்ட காட்சி, நிலமகள் மறைகூற, அதனை யானை கேட்டலை ஒத்தனவாம்.

***வேல்நிறத்(து) இங்க, வயவரால் ஏறுண்டு***
***கால்நிலம் கொள்ளாக் கலங்கிச் செவிசாய்த்து,***
***மாநிலம் கூறு மறைகேட்ப போன்றவே;***
***பா(டு)ஆர் இடிமுரசின் பாய்புனல் நீர்நாடன்***
***கூடாரை அட்ட களத்து.*** ***41***

**ப-ரை:** பாடு ஆர் - ஒலிநிறைந்த, இடி - இடிபோன்ற, முர சின் - முரசினையும், பாய் புனல் - நீர் நிறைந்த, நீர் நாடன் - காவிரி நாட்டையும் உடைய சோழன், கூடாரை - பகைவரை, அட்ட - கொன்ற, களத்து - போர்க்களத்திடத்து, வேல்-வேலா னது, நிறத்து - மார்பில், இங்க - அழுந்த, வயவர் - வீரரால், ஏறுண்டு - குத்தப்பட்டு, கால் நிலம் கொள்ளா - கால்கள் தளர்ந்து, கலங்கி - வீழ்ந்து, செவிசாய்த்து - செவிகளைச் சாய்த்து (யானைகள் கிடத்தல்), மாநிலம் - நிலமகள், கூறும் - சொல்லுகின்ற, மறை - வேதத்தை, கேட்ட - கேட்டலை, போன்ற - ஒத்தன.

**க-ரை:** போரில் யானைகளை வீரர்கள் வேலை வீசியும், மேலேறிக் குத்தியும் நிலத்திடைச் சாய்க்க, அவை காதை நிலத்திடைவைத்து வீழ்ந்திருக்கும் காட்சி, நிலமகள் கூறும் மறையைக் கேட்டலை ஒத்தனவாம்.

மறை - மந்திரம். செவி சாய்த்து - மந்திரம் கேட்கும் முறையைக் குறித்தது. 'பாய் புனல்'— வினைத் தொகை யாக்காது பரந்த நீர் என்று பொருள் கொளல் சிறந்ததாம். மாநிலம் - ஆகு பெயர்.

**திங்களும் முயலும்**

பகை மன்னர் குடலைப் பற்றித் தின்று, வெண்குடை யின் முன் உறங்கும் நரியின் தோற்றம், திங்களும் அதன் களங்கத்தையும், ஒத்து நிற்கும்.

*[1] படைப்பொலிதார் மன்னர் பரூஉக்குடர் மாந்திக்*
*குடைப்புறத்துத் துஞ்சும் இகலன்—இடைப்பொலிந்த*
*திங்களில் தோன்றும் முயல்போலும் செம்பியன்*
*செங்கண் சிவந்த களத்து. 42*

***ப-ரை:*** செம்பியன் - சோழனுடைய, செங்கண் - சிவந்த கண்கள், சிவந்த - கோபத்தால் மேலும் சிவந்திடும், களத்து - போர்க்களத்திடத்து, படைப்பொலிதார் - போர்க்குரிய அடையாள மாலையை அணிந்துள்ள, மன்னர் - (பகை) அரசர்களின், பரு குடர் - பருத்த குடல்களை, மாந்தி - தின்று, குடைப் புறத்து — (வீழ்ந்து கிடக்கும்) வெண்சக்கரக் குடைகளின் வெளிப்புறத்து, இகலன் - நரியானது, துஞ்சும் - உறங்கும் காட்சியானது, இடைப் பொலிந்த - வானத்திடை விளங்கும், திங்களில் - (சந்திரனையும்) அதனிடத்து; தோன்றும் - காணப் பெறும், முயல் போலும் - களங்கத்தைப் போன்றதாகும்.

**க-ரை:** போர்க்குரிய மாலையை அணிந்த அரசர்களின் குடல்களைத் தின்று வெண்சக்கரக் குடைக்கு வெளியே படுத்துறங்கும் நரியின் காட்சியானது, திங்களும் அதனில் தோன்றும் களங்கத்தையும் ஒத்திருக்குமாம்.

படைப்பொலிதார் - போர்க்குரிய பூ, மாலை முதலியன; இதனை அடையாளப் பூ, மரபுப் பூ என்பர். 'போர்ப்பூவும் தார்ப் பூவும்' (தொல் - பொருள் - 620) எனக் கூறலால் அறிக. செங்கண் - செவ்வரி பரந்த கண்களைக் குறிக்க வந்தது. குடை ஈண்டு வெண்சக்கரக் குடையையுணர்த்திற்று. பரூஉக் குடர் - சொல்லிசையளபெடை. குடர் - குடல் என்பதன் ஈற்றுப்போலி. முயல் - களங்கம். இதனை முயல்கறை என்றும் வழங்குவர்.




1. இப்பாடல் புறத்திரட்டு எனும் நூலில் 1428-வது செய்யுளாகக் கூறப்பட்டுள்ளது.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

(பக்க எண் குறித்துளது)

## இன்னு நாற்பது


அடக்கம் 40
அறமனத்தார் 15
ஆற்றலிலா 16
ஆன்றவிந்த 23
ஈத்தவகை 26
உடம்பாடு 19
உண்ணுது 23
உரனுடையார் 24
எருது இல் 14
எழிலி 37
ஏமமில் 29
ஒழுக்கமிலா 36
கல்லாதான் 32
கள் இல்லா 18
கள்ளுண்பான் 35
குலத்துப் 25
குறியறியான் 32
கொடுக்கும் 40
கொடுங்கோல் 13
சிறையில் கரு 15
சிறையில்லா 28
தலைதண்டம் 20
தன்னைத்தான் 35
நட்டார் 29
நறிய மலர் 38
நெடுமர 33
பகல்போலும் 17
பண்ணமையா 34
பந்தமில் 11
பார்ப்பாரில் 12
பிறன் மனையாள் 39
புல்லார் 22
பெரியாரோ 30
பெருமை 31
பொருளிலான் 37
பொருளுணர்வார் 18
மணியிலா 21
மாரிநாள் 26
முக்கண் (கடவுட் துதி) 11
யானையில் 27
வணர் ஒலி 21


---

## இனியவை நாற்பது


அடைந்தார் 68
அதர் சென்று 54
அந்தணர் 50
அவ்வித்து 72
ஆற்றுந்துணை 49
ஆற்றுனை 66
இளமையை 73
உடையான் 46
ஊருங் கலிமா 51
ஊர் முனியா 70
எல்லிப் பொழுது 70
ஏவது மாறு 47
ஐவாய 64
ஒற்றினுல் 71
கடமுண்டு 53
கண் மூன்று 45
கயவரை 67
கற்ருர் முன் 57

| | | | |
|---|---|---|---|
| கற்றறிந்தார் | 69 | நன்றிப் பயன் | 67 |
| காவோடறக் | 62 | பத்துக்கொடுத் | 75 |
| குழவி தளர் | 56 | பிச்சைபுக்காயினும் | 46 |
| குழவி பிணி | 54 | பிச்சை புக்கு உண் | 74 |
| கொல்லாமை | 49 | பிறன் கைப் | 61 |
| சலவரை | 60 | பிறன் மனை | 57 |
| சிற்ருள் | 73 | மன்றின் | 59 |
| தங்கண் | 52 | மானமழிந்த | 55 |
| தானங்கொடு | 65 | யானையுடைய | 48 |
| நச்சித்தன் | 64 | வருவாயறிந்து | 61 |
| நட்டார்க்கு | 58 | வெல்வது | 63 |
| நட்டார்ப்புறங் | 59 | | |

---

## கார் நாற்பது

| | | | |
|---|---|---|---|
| அலவன் கண் | 108 | சென்றநம் | 105 |
| அறைறக்கல் | 91 | திருந்திழாய் | 90 |
| ஆடுமகளிரின் | 81 | தொடியிட | 83 |
| இகழுநர் | 82 | நச்சியார்க்கு | 83 |
| இமிழிசை | 99 | நலமிகு | 98 |
| இளையரும் | 95 | நாஞ்சில் | 93 |
| எல்லா வினை | 96 | புகர்முகம் | 107 |
| ஏங்தெழில் | 88 | புணர்தரு | 87 |
| கடல்நீர் | 103 | பொங்கரும் | 100 |
| கடாஅவுக | 102 | பொருகடல் | 79 |
| கடுங்கதிர் | 80 | பொறிமாண் | 94 |
| கண் திரள் | 96 | மண்ணியல் | 84 |
| கருங்கடல் | 106 | முருகியம் | 99 |
| கருங்கால் | 97 | மையெழில் | 87 |
| கருங்குயில் | 90 | வந்தன | 109 |
| கருவிளை | 85 | வரிநிறப் | 80 |
| கல்பயில் | 92 | வரைமல்க | 101 |
| கார்ச்சேண் | 102 | வானேறு | 86 |
| சிரல்வாய் | 105 | விரிதிரை | 104 |
| செல்வம்தரல் | 89 | வீறுசால் | 93 |

---

## களவழி நாற்பது

| | | | |
|---|---|---|---|
| அஞ்சனக்குன்று | 118 | ஆர்ப்பெழுந்த | 126 |
| அரசர் | 141 | இடைமருப்பின் | 127 |

இணரிய 138
இருசிறகர் 128
இருநிலம் 129
இணேவேல் 128
உருவக்கடுங் 116
எவ்வாயும் 132
எற்றி வயவர் 130
ஒழுக்கும் குருதி 115
ஒஒஉவம 140
ஓடாமறவர் 134
ஓடாமறவரெறிய 136
ஓவாக்கணே 122
கடிகாவில் 135
கவளங்கொள் 123
கழுமிய 121
கொல்யானே 124
செஞ்சேற்றுள் 133
செவ்வரை 139
ஞாட்பினுள் 114
திண்தோள் 131
தெரிகணே 117
நளிந்த 126
நாலுல் திசை 117
நாள் ஞாயிறு 114
நிரைகதிர் 123
படைப்பொலிதார் 145
பரும இனமா 125
பருமப் பணே 142
பல்கணே 126
பொய்கை 138
மடங்க 135
மலேகலங்க 132
மேலோரை 120
மையில்மா 137
மைந்து 142
யாணேமேல் 119
வெள்ளி 143
வேல்நிறத்து 144






L. இராமனாதன், M.A., M.Phil
தமிழ் பேராசிரியர்
தமிழ் துறைத் தலைவர்
அரசு கலைக் கல்லூரி
இராமநாதபுரம்
(இ) அரண்மனை சிறுவயல்